உ
சிவமயம்



# उपमन्युकृत
# अर्धनारीश्वराष्टकस्तोत्रम्

## உபமன்யு செய்த
## அர்த்தநாரீச்வராஷ்டக ஸ்தோத்ரம்


தமிழ் உரை :
டாக்டர் ந. கங்காதரன், எம்.ஏ., எம்.லிட், பிஹெச்.டி.


अम्भोधरश्यामलकुन्तलायै
तटित्प्रभाताम्रजटाधराय ।
निरीश्वरायै निखिलेश्वराय
नमश्शिवायै च नमश्शिवाय ॥ १ ॥

அம்போதர ச்யாமலகுந்தலாயை
தடித் ப்ரபா தாம்ர ஜடாதராய ।
நிரீச்வராயை நிகிலேச்வராய
நமச்சிவாயை ச நமச்சிவாய ॥ 1

மேகங்களையொத்த கருத்த கூந்தலையுடையவளு
பூர்ணமான ஐச்வர்யத்திற்கப்பாற்பட்டவளுமான உமைக்
என் வணக்கங்கள். மின்னல் ஒளிரும் பழுப்பு நிறமா

சடையை உடையவரும், யாவற்றிற்கும் அதிபதியுமான சிவனுக்கு என் வணக்கங்கள்.

இந்தச் செய்யுளிலும் இதன் பின்னர் வரும் செய்யுட்களிலும் முதலடி உமையையும் இரண்டாவது அடி உமை ஒரு பாகங் கொண்ட சிவனாரையும் அதற்கடுத்த இரண்டு அடிகளும் இருவரையும் குறிப்பிடும் சொற்களையுடையவை யாகவும் அமைக்கப்பட்டுள்ளன. இருவருமே ஒருவருக்கொருவர் இணையான சக்தியைப் பெற்றவர். அதைப் போற்றும் வண்ணம் அமைக்கப்பட்டுள்ளது இந்தத் துதி.

प्रदीप्तरत्नोज्ज्वलकुण्डलायै
स्फुरन्महापन्नगभूषणाय ।
शिवप्रियायै च शिवाप्रियाय
नमश्शिवायै च नमश्शिवाय ॥ २ ॥

ப்ரதீப்தரத்னோஜ்ஜ்வல குண்டலாயை
ஸ்புரந்மஹா பந்நக பூஷணாய ।
சிவப்ரியாயை ச சிவாப்ரியாய
நமச்சிவாயை ச நமச்சிவாய ॥ 2 ॥

ஒளிரும் இரத்தினங்களுடன் பிரகாசிக்கும் குண்டலங்களையுடையவளும், சிவனுருக்குப் பிரியமானவளுமான உமைக்கு என் வணக்கங்கள். மின்னும் சிறந்த அரவத்தை அணிகலனாக உடையவரும், சிவா என்னும் உமைக்குப் பிரியமானவருமான சிவனுருக்கு என் வணக்கங்கள்.

சிவனார் ஆபரணங்கள் எதையும் அணியாதவர். அதனால் மின்னும் அரவங்களே அவருடைய அணிகலன்கள். ஆனால் உமைக்கோ ஒளிரும் இரத்தினங்கள் பதித்த குண்டலங்கள் அணிகலன்களாகும்.

मन्दारमालाकलितालकायै
कपालमालाङ्कितकन्धराय ।
दिव्याम्बरायै च दिगम्बराय
नमश्शिवायै च नमश्शिवाय ॥ ३ ॥

மந்தாரமாலா கலிதாலகாயை
கபால மாலாங்கித கந்தராய
திவ்யாம்பராயை ச திகம்பராய
நமச்சிவாயை ச நமச்சிவாய ॥ 3 ॥

பாரிஜாத மலர் மாலை சூடிய கூந்தலையுடையவளும் நேர்த்தியான ஆடையை உடுத்தியவளுமான உமைக்கு என் வணக்கங்கள். மண்டை ஓட்டினலான மாலையையணிந்த உடலையுடையவரும், திசைகளை உடையாக அணிந்தவரு மான சிவனுருக்கு என் வணக்கங்கள்.

कस्तूरिकाकुङ्कुमलेपनायै
श्मशानभस्माङ्गविलेपनाय ।
कृतस्मरायै विकृतस्मराय
नमश्शिवायै च नमश्शिवाय ॥ ४ ॥

கஸ்தூரிகா குங்கும லேபனையை
ச்மசானபஸ்மாங்க விலேபனுய ।
க்ருதஸ்மராயை விக்ருதஸ்மராய
நமச்சிவாயை ச நமச்சிவாய ॥ 4 ॥

கஸ்தூரி, குங்குமம் முதலியவற்றை உடலில் பூசிய வளும், காமனை நினைவில் கொண்டவளுமான உமைக்கு வணக்கங்கள் மயானத்துச் சாம்பலை உடலில் பூசியவரும்

காமனை உடலற்றவராகச் செய்தவருமான சிவனுருக்கு வணக்கங்கள்.

சிவனுரைக் கணவனுகப் பெறக் காரணமான காமனைத் தன் நினைவில் கொள்பவளாக உமையும், தன் தியானத்தை கலைக்கக் காரணமான காமனை எரித்தவராக பரமசிவனும் இங்கு கவியால் வர்ணிக்கப்பட்டுள்ளனர்.

पादारविन्दार्पितहंसकायै
पादाब्जराजत्फणिनूपुराय ।
कलामयायै विकलामयाय
नमश्शिवायै च नमश्शिवाय ॥ ५ ॥

பாதாரவிந்தார்ப்பித ஹம்ஸகாயை
பாதாப்ஜராஜத் பணி நூபுராய ।
கலாமயாயை விகலாமயாய
நமச்சிவாயை ச நமச்சிவாய ॥ 5 ॥

தாமரைத் திருவடிகளில் குடிகொண்ட அன்னப் பறவையை உடையவளும் கலைவடிவானவளுமான உமைக்கு வணக்கங்கள். பாதத் தாமரைகளில் ஒளிரும் அரவங்களையே கால் சிலம்பாக உடையவரும், குறைகளற்றவருமான சிவனுருக்கு வணக்கங்கள்.

ஆமயம் என்னும் சொல்லிற்கு நோய் அல்லது குறை என்பது பொருள். இங்கு விகலாமயாய என்னும் சொல் சிவனுரைக் குறை எதுவுமற்றவர் என்று குறிக்கிறது.

प्रपञ्चसृष्ट्युन्मुखलास्यकायै
समस्तसंहारकताण्डवाय ।
समेक्षणायै विषमेक्षणाय
नमश्शिवायै च नमश्शिवाय ॥ ६ ॥

ப்ரபஞ்ச ஸ்ருஷ்ட்யுந்முகலாஸ்யகாயை
ஸமஸ்த ஸம்ஹாரக தாண்டவாய ।
ஸமேக்ஷணாயை விஷமேக்ஷணாய
நமச்சிவாயை ச நமச்சிவாய ॥ 6 ॥

ப்ரபஞ்சத்தின் படைப்பை எதிர் நோக்கி நடனம் செய்பவளும், ஒழுங்கான பார்வையையுடையவளுமான உமைக்கு வணக்கங்கள். யாவற்றையும் அழிக்கும் தாண்டவத்தைச் செய்பவரும், ஒழுங்கற்ற கண்களை உடையவரும் ஆன சிவனுருக்கு வணக்கங்கள்.

प्रफुल्लनीलोत्पललोचनायै
विकासपङ्केरुहलोचनाय ।
जगज्जनन्यै जगदेकपित्रे
नमश्शिवायै च नमश्शिवाय ॥ ७ ॥

ப்ரபுல்ல நீலோத்பல லோசனாயை
விகாஸ பங்கேருஹ லோசனாய ।
ஜகஜ்ஜனன்யை ஜகதேகபித்ரே
நமச்சிவாயை ச நமச்சிவாய ॥ 7 ॥

மலர்ந்த கருநெய்தல் பூவைப்போன்ற கண்களை உடையவளும், உலகிற்குத் தாயானவளுமான உமைக்கு வணக்கங்கள். மலர்ந்த தாமரை போன்ற கண்களை உடையவரும் உலகிற்கு பிரதானமான தந்தையான சிவனுருக்கு வணக்கங்கள்.

अन्तर्बहिश्चोर्ध्वमधश्च मध्ये
पुरश्च पश्चाच्च विदिक्षु दिक्षु ।

सर्वं गतायै सकलं गताय
नमश्शिवायै च नमश्शिवाय ॥ ८ ॥

அந்தர் பஹிச்சோர்த்வமதச்ச மத்யே
புரச்ச பச்சாச்ச விதிக்ஷு திக்ஷு ।
ஸர்வம் கதாயை ஸகலம் கதாய
நமச்சிவாயை ச நமச்சிவாய ॥ 8 ॥

உள்ளும் புறமும், மேலும் கீழும், இடையிலும், முன்னும் பின்னும், திசைகளனைத்திலும் எங்கும் வியாபித்திருப்பவளுக்கும், எவ்விடமும் செல்பவருக்கும் உமைக்கும் சிவனுருக்கும் வணக்கங்கள்.

இந்த செய்யுளில் உமைக்கும், உமையொருபாகன் இருவருக்கும் பொருத்தமான சொற்களைக் கொண்டு அவர்களின் மேன்மையை கவி விளக்கியுள்ளார்.

उपमन्युकृतं स्तोत्रमर्धनारीश्वराह्वयम् ।
यः पठेच्छृणुयाद्वापि शिवलोके महीयते ॥ ९ ॥

உபமன்யுக்ருதம் ஸ்தோத்ர-
மர்த்தநாரீச்வராஹ்வயம் ।
ய: படேச்ச்ருணுயாத்வாபி
சிவலோகே மஹீயதே ॥ 9 ॥

அர்த்தநாரீச்வர ஸ்தோத்திரம் என்று பெயருடையதும் உபமன்யு செய்ததுமான இத்துதியை எவனொருவன் படிக்கின்றானோ அல்லது கேட்கிறானோ அவன் சிவலோகத்தில் போற்றப்படுகின்றான்.

உரையாசிரியர் குறிப்பு:

இந்தத் துதியில் முதல் எட்டு செய்யுட்களும் 'உபஜாதி' விருத்தத்திலும், கடைசிச் செய்யுள் 'அநுஷ்டுப்' விருத்தத்திலும், அமைக்கப்பட்டுள்ளன.

உபமன்யு என்பவர் ஒரு சிறந்த சிவபக்தர். அவருடைய சரித்திரம் லிங்க புராணத்திலும், மஹாபாரதத்தில் அனுசாஸன பர்வத்தில் அத்தியாயம் 14 முதற் கொண்டும் கூறப்பட்டுள்ளது. அது பின் வருமாறு:

உபமன்யு தன் மாமன் வீட்டில் வளர்ந்து வரும் பொழுது தற்செயலாய் சுவையுள்ளதும் தரம் மிகுந்தது மான சிறிது பாலை அருந்தியவன் அது போலவே இன்னமும் அருந்த விரும்பி தன் அன்னையை அணுகிக் கேட்டான். தன்னுடைய சக்திக்கப்பாற்பட்ட பொருளைத் தன்னிடம் கேட்கும் பாலகனுக்குக் கொடுக்க இயலாத அன்னை தான் பிக்ஷை எடுத்துக் கொணர்ந்த தானியங்களை மாவாக அரைத்து கரைத்துக் கொடுத்தாள். அதைக் குடித்த உபமன்யு அது தான் முன்னர் குடித்த பால் போலில்லை என்று கூறி அதைக் குடிக்க மறுத்தான். தன் விதியை நொந்த தாய் அவனைத் தேற்றி யாவும் தன் முன்வினைப் பயனே எனக் கூறி பரமசிவனை வழிபட அவனை ஊக்குவித்தாள். பாலகனும் கடும் விரதம் மேற்கொண்டு காற்றையே புசிப்பவனாக கடுந்தவம் இயற்றினான். அவன் தவத்தைக் கண்டு மனம் மகிழ்ந்த சிவன் அவனை சோதிக்க எண்ணி இந்திரனின் உருவில் தோன்றி சிவனைப் பலவிதமாக இகழ்ந்து பேசத் தொடங்கினார். அதுகண்டு சினந்த உபமன்யு அவரைத் தாக்க ஆயத்தம் செய்தபொழுது சிவனார் தன் சுய உருவில் தோன்றி அவனுக்கு அருள் செய்தார்.

இதன் விவரமான கதை ஸ்ரீ சங்கர பக்த ஜன சபையின் 1974-ம் ஆண்டு ஸ்ரீ சங்கர ஜயந்தி மலரில் பக்கங்கள் 167-168ல் பிரசுரிக்கப்பட்டுள்ளது

சிவம்